27th April 1960]

THE HON. SRI C. SUBRAMANIAM : அதை எப்படித் தடுப்பது என்பதுதான் கஷ்டமாக இருக்கிறது. அது பற்றியும் சர்க்கார் பரிசீலனை செய்து, ஏதாவது நடவடிக்கை எடுக்க முடியுமா என்பது பற்றி இன்னும் முடிவு செய்யப்படாத நிலையில் இருக்கிறது. இது மாதிரி ஒரு பிரசுரம் வெளியிடக் கூடாது என்று சொன்னால், அது தனிப்பட்டவர்களுடைய உரிமையைப் பாதிக்கும் என்று சொல்லக்கூடிய நிலைமை இருக்கிறது. ஆகையினால் அது அவ்வளவு சுலபமான காரியம் அல்ல.

*Sports*

* 836 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the steps taken by the Government to improve the standard of sports ; and

(*b*) whether any special attention has been paid to improve foot-ball game ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Government have constituted the Madras State Sports Council in July 1956 for the promotion of games and sports among the student and non-student population of this State. Financial assistance is given by the Council to the several State Associations controlling games and sports in the State, for coaching schemes, participation in National and International competitions and the conduct of the national competitions in the State. Republic Day games and Sports competitions for pupils of secondary schools (boys and girls) at the Educational District and the State levels have been introduced. From among those who distinguish themselves in these competitions are selected students to whom scholarships for study are given.

(*b*) No special action for improvement of the standard of the game of foot-ball has been taken.

SRI N. K. PALANISAMI : மற்ற தேசங்களைப் போல் விளையாட்டிலே திறமையுள்ளவர்களுக்கு உத்தியோகச் சலுகை கொடுத்து, மேலும் ஸ்போர்ட்ஸை இம்ப்ரூவ் செய்வதற்கு அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : வேலை செய்யக் கூடிய தகுதியும் அவர்களுக்கு இருக்க வேண்டும். வேலை செய்யக் கூடிய தகுதி இல்லாமல், விளையாட்டுத் திறமைக்காக மட்டும் வேலை கொடுக்க முடியாது. இரண்டு பேர்கள் பாஸ் செய்தவர்கள் இருக்கும்பொழுது, ஸ்போர்ட்ஸில் திறமையுள்ளவருக்கு வேலை கொடுப்பதற்கு இப்பொழுதே விதியில் இடம் இருக்கிறது.

SRI A. A. RASHEED : May I know whether encouragement will be given for the playing of marbles and tops also ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்த விளையாட்டுகளுக்கு நாம் ஒன்றும் உதவி செய்ய வேண்டியதில்லை. அவர்களே விளையாடிக் கொள்ளுவார்கள். திறமையும் தானுகவே வந்துவிடும்.

SRI K. B. S. MANI : இப்படிப்பட்ட விஷயங்களிலே கால் பந்து, ஹாக்கி விளையாட்டுப் போட்டிகளுக்காக நபர்களைப் பொறுக்குகின்ற கமிட்டியார் பார்ஷியாலிடி காட்டி சென்னையில் இருப்பவர்களுக்குத்தான் அதிக சலுகை கொடுக்கிறார்கள், வெளியிலிருப்பவர்களை தேர்ந்தெடுப்பதில்லை என்ற புகார்கள் வந்திருக்கின்றனவா ? அம்மாதிரி வந்திருந் தால் அதைப் பரிசீலித்து ஜில்லாக்களில் இருக்கும் விளையாட்டுகளில்

[27th April 1960

திறமைசாலிகளாக உள்ளவர்களையும், அகில இந்தியப் போட்டிக்கும், ஸ்டேட் போட்டிகளுக்கும் தேர்ந்தெடுப்பதற்கு அரசாங்கம் வசதி செய்து கொடுக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அது மாதிரி புகார் எனக்கு ஒன்றும் வரவில்லை.

*Clothing for the very poor students*

* 837 *Q*.—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா :—

(அ) மிக ஏழை மாணவர்களுக்கு உடை அளிக்கும் திட்டம் அரசாங்கத்தினிடம் இருக்கிறதா ?

(ஆ) அப்படியானால், அதன் விபரமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM: (அ) No, Sir ; there is no Government scheme.

(ஆ) Does not arise.

SRI A. VEDARATHNAM : பல இடங்களில் இப்பொழுது உடை வழங்கும் மகாநாடுகள் நடத்தப்படுகின்றன. அத்தகைய மகாநாடுகள் எவ்வளவு நடந்திருக்கின்றன, எவ்வளவு உடை வழங்கப்பட்டிருக்கிறது என்பதாவது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? ஜப்பானிய நாடு போல பள்ளிகளில் படிக்கும் மாணவர்கள் எல்லோரும் ஒரே மாதிரி உடை அணிய வேண்டுமென்கிற ஒரு நிலைமையை அமுலுக்குக் கொண்டுவருவது பற்றி அரசாங்கம் ஆலோசிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது உடை வழங்கக் கூடிய இயக்கம் அரசாங்க இயக்கமாக இல்லாமல் மக்களுடைய இயக்கமாக வளர்ந்துகொண்டு வருகிறது. பல மகாநாடுகள் அம்மாதிரி நடைபெற்றிருக்கின்றன. எத்தனை மகாநாடுகள் நடந்தன, எத்தனை உடைகள் வழங்கப்பட்டன என்கின்ற விவரம் இப்பொழுது என்னிடத்தில் இல்லை. ஜப்பான் நாட்டில் உள்ள பிரகாரம் நாமும் பள்ளிகளில் படிக்கிற மாணவர்கள் எல்லோருக்கும் ஒரே மாதிரியாக உடை கொடுக்க வேண்டுமென்பது நல்ல கருத்து. அதை செய்து முடிப்பதற்கு அதிகமாக செலவு ஆகக் கூடிய காரணத்தினாலே, இதை ஒரு லட்சியமாக வைத்துக் கொண்டு, இந்த லட்சியத்தை நிறைவேற்றுவதற்கு நாம் முயற்சி செய்ய வேண்டும்.

SRI K. VINAYAKAM: Sir, whereas it has been found very easy to collect this clothing for poor children in the rural parts, and whereas it is found very difficult to collect it in the City of Madras—a conference over which the Hon. Minister is going to preside this evening,—will the Government at least give aid to the Madras City children for the purpose of getting clothes ?

THE HON. SRI C. SUBRAMANIAM: Priority will be shown to the rural children. The city or town children will get only second priority. Sufficient voluntary help is not coming forth, because the public are not participating in this movement.

SRI A. A. RASHEED: May I know, Sir, whether the Government have received any aid from the UNICEF for the purchase of clothes ?

THE HON. SRI C. SUBRAMANIAM: Not to my knowledge.